31st August 1961]

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : லீவில் இருக்கும் போது அவர் என்ன செய்கிறார் என்பதற்கு அரசாங்கம் உத்தரவாதமாக இருக்க முடியாது ?

SRI V. K. KOTHANDARAMAN : இந்த இன்ஜினியர் அங்கிருக்கும் ஆளும் கட்சியைச்சேர்ந்த வசதி படைத்த ஒரு சிலருக்குச் சாதகமாக இருக்கிறார் என்கிற காரணத்திற்காக வேண்டி, இதுபோன்று அவருக்கு வந்த ட்ரான்ஸ்பர் ஆர்டர்களைக்கூட கான்சல் செய்வதற்கான முயற்சி செய்யப்பட்டது என்பது உண்மையா ? இனிமேலாவது தயவுசெய்து நேர்மையாக நடப்பதற்கு முயற்சி செய்யப்படுமா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : ஆளும் கட்சி—எதிர்க் கட்சி என்று வேற்றுமைப்படுத்திப் பேச கனம் அங்கத்தினர் இதைப் பயன்படுத்துகிறாரே தவிர, அதற்கு ஆதாரம் இல்லை.

THE HON. SRI C. SUBRAMANIAM : I object to the insinuation made. "இனிமேலாவது மனைவியை அடிக்காமல் இருப்பாரா ?" என்று கேட்பது போல், "இனிமேலாவது நேர்மையாக நடப்பதற்கு முயற்சி செய்யப்படுமா"? என்று கனம் அங்கத்தினர் கேட்கிறார். It looks as if we have not been straight-forward or just till now. I am sorry the hon. Member always indulges in such insinuations.

DEPUTY SPEAKER : The Engineer has been transferred. What is the use of putting supplementaries? We shall pass on to the next question.

*Minor Port for Athirampattinam*

DEPUTY SPEAKER : As the hon. Member who gave notice of Question No. 1550 is not in his seat, the question and answer will be printed in the proceedings.

*1550 *Q.*—SRI A. R. MARIMUTHU : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

தஞ்சை ஜில்லா அதிராம்பட்டிணத்தில் கடலில் படகுகள்மூலம் சாமான்கள் போக்குவரத்துக்காக சிறு துறைமுக வசதி செய்ய உத்தேசமுண்டா ?

THE HON. SRI P. KAKKAN : No, Sir.

*Secondary Education Bill*

* 1551 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state when the secondary Education Bill is likely to be introduced in the Assembly?

THE HON. SRI C. SUBRAMANIAM : The matter is under consideration and it is not possible to indicate the time of introduction.

SRI M. KALYANASUNDARAM : அக்டோபர் 2-ந் தேதி ஜில்லா போர்டுகள் மறைந்துவிடும். அதன் பிறகு ஜில்லா போர்டுகள் இருந்தாலும் பிரயோஜனம் இல்லை. இதுவரைக்கும் ஜில்லா போர்டு நிர்வாகத்தில் இருந்த உயர்நிலைப் பள்ளிகள், புதிய சட்டம் நிறைவேறுகிற வரையில், எப்படி நிர்வகிக்கப்படும் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. அவற்றின் விவரங்கள் வேண்டுமானால் கனம் அங்கத்தினர் தனிக் கேள்வி போட்டால் சொல்ல முடியும்.

[31st August 1961

SRI N. K. PALANISAMI : செகண்டரி எடுகேஷன் கமிட்டியின் சிபார்சுகள் சர்க்காருக்கு வந்து இரண்டு வருஷங்கள் ஆகியும், அவற்றின் பேரில் சர்க்கார் நடவடிக்கை எடுக்காமலிருப்பதற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இரண்டு வருஷம் ஆயிற்று என்று சொல்வது சரியல்ல. சமீபத்தில் தான் முடிவு எடுக்கப்பட்டது. அந்த முடிவுகளெல்லாம் நிர்வாக அடிப்படையில் எந்த அளவு சரியாக வரும் என்பது பற்றி இப்பொழுது பரிசீலனையில் இருக்கின்றன.

SRI M. KALYANASUNDARAM : கல்வி ஆலோசனைக் குழு ஒன்று இருக்கிறதே, அதன் கூட்டத்தையாவது சீக்கிரத்தில் நடத்தி, இதில் சிக்கல்கள் ஏதாவது இருந்தால் அவற்றை விடுவிப்பதற்கு நடவடிக்கை எடுக்கப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஆலோசனைக் குழுவைப் பொறுத்த வரையில், செகண்டரி எடுகேஷன் பில்லை என்ன விதத்தில் முடிவு செய்யலாம் என்று ஆலோசனை சொல்லியிருக்கிறார்கள். அதை நிர்வாக அடிப்படையில், நடைமுறையில் கொண்டுவரும்போது, ஏதாவது சிக்கல் இருக்குமா என்பது பற்றி பரிசீலனை நடக்கிறது. அந்தப் பரிசீலனை தீர்ந்தவுடனே முடிவு எடுக்க முடியும்.

SRI K. VINAYAKAM : What are the supposed defects of the present secondary education system which the proposed legislation seeks to rectify?

THE HON. SRI C. SUBRAMANIAM : The Bill will not deal with the education system as such. The administrative aspects and other things will be dealt with in the Bill.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : இன்னும் ஒரு மாதம் கூட இல்லாத காரணத்தால், எப்பொழுது முடிவு எடுக்கப்போகிறார்கள் என்று திட்டவட்டமாக அமைச்சர் அவர்கள் பதில் சொல்ல முடியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஜில்லா போர்டு போகும்போது உயர்நிலைப்பள்ளிகளை யார் எடுத்து மானேஜ் பண்ணுவது என்பது முடிவாகி விட்டது. அதுபற்றி தனியாக கேள்வி போட்டால் விவரம் சொல்ல முடியும். இப்பொழுது உடனடியாக என்னிடம் அந்த விவரம் இல்லை.

SRI M. KALYANASUNDARAM : அக்டோபர் 2-ந் தேதியிலிருந்து உயர்நிலைப் பள்ளிகளினுடைய நிர்வாகப் பொறுப்பு கலெக்டருடைய தனிப்பட்ட பொறுப்பில் விட்டுவைக்கப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : என்ன ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது என்பது பற்றி தனிக் கேள்வி போட்டால் அதன் விவரங்கள் தரலாம்.

SRI M. KALYANASUNDARAM : பஞ்சாயத்து யூனியன்கள் ஏற்பட்டு விட்டன. இப்பொழுது அந்தப் பள்ளிகள் எப்படி நிர்வகிக்கப்படுகின்றன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்பொழுது டிஸ்ட்ரிக்ட் போர்டு இருக்கிறது. அது டிஸ்ட்ரிக்ட் கலெக்டர் பொறுப்பிலே இருக்கலாம், இன்னொருவர் பொறுப்பிலே இருக்கலாம். டிஸ்ட்ரிக்ட் போர்டு நிர்வாகத்தில் இருந்தவைகளை அக்டோபர் 2-ந் தேதியிலிருந்து தற்காலிகமாக வேறு எப்படி மானேஜ் பண்ணுவது என்பது பற்றி முடிவு செய்யப்பட்டிருக்கிறது. அதற்குத் தனிக் கேள்வி போட்டால் விவரம் கொடுக்கிறேன்.